

# த்தரின் கார்ட்டூன் மொழி

பிறகு அவனுக்கு இருபத்தி எட்டு வயதானது. அப்போது அவன் தன்னையே கௌதம புத்தராகவும் தனது எட்டாவது வயதில் வேம்பு படர்ந்த இம்பீரியல் தியேட்டரில் தான் பார்த்த கடற் கன்னி படத்தில் வரும் மீன் உடல் கொண்ட பெண்ணைத் தேடு பவனாகவும் துண்டிக்கப்படாத தனது வலது கரம் பற்றிய துயரத் தோடு இரும்புக் கை மாயாவியாக முடியாமல் போனதற்காக மனம் பிறழ்வுற்றுக் கொஞ்ச காலம் மனநலக் காப்பகம் எனும் இடத்தில் வசித்தவனாகவுமிருந்தது நடந்தேறியது.

மொட்டையடிக்கப்பட்ட தலையோடு அலைந்துகொண்டிருந்த சிறுவன் வீட்டின் பின்புறமெங்கும் அலைந்துகொண்டிருந்தான். அவன் முகம் கருத்து, இறுகியிருந்தது. தன்னைச் சுற்றிய ஒவ்வொன்றுக்கும் அவன் பயந்து பயந்து ஓடினான். பெருமூச்சு படிந்த அவன் அறை அவனின் சப்தங்களை உள்வாங்கி நின்றது. அ.தீ.கொ. கழக உளவாளிகள் நண்பர்கள் போல் உருக் கொண்டார்கள்.. அவர்கள் சிரித்தபடி மாலையில் சந்தித்துக் கொண்டார்கள். அப்போது இரும்புக் கை மாயாவி கெய்ரோவில் ‘அய்வான் சதிவலை’ திட்டத்தினைக் கண்டுபிடிக்க இழந்த தன் வலது கரத்தோடு மின் இணைப்புகளை நாடி அலைந்து கொண்டிருந்தான். அ.தீ.கொ. கழகம் மனத்தின் நுட்பங்களை வெடி வைத்து உடைக்கவும், நட்பு அறுபடவும், பரஸ்பரம் ஒருவரை மற்றவருக்கு எதிராகவும் மாற்றச் செய்துவரும் நடவடிக்கைகள் மாயாவிக்குத் தெரிய வந்தன. மின்சாரத்தில் இரும்புக் கை மாயாவி கையை வைத்தார். உடல் எங்கும் பளீர் பளீர் என மின்னலடித்தது. கை மட்டும் மாயாவி ஆனது. கை வெற்று வெளியில் அலைந்தது. காற்றில் மிதக்கும் கை, இரும்புக் கை மாயாவி. ஜானிநீரோ, ரிப் கெர்பி, மார்டின் அ.தீ.கொ. கழகத்

தலைவர் குழி எலி, எண்பத்து எட்டுப் பக்கம் கொண்ட காமிக்ஸ் படித்தபடி இருப்பார்கள். ஒரு காமிக்ஸ், காமிக்ஸ் வாசிப்பவர்கள் கவனத்துக்கு எனத் தலைப்பிடப்பட்ட அட்டை தொங்கும் நூலகத்துக்கு அவன் போய் வந்து கொண்டிருந்தான். சில பிரம்பு நாற்காலிகள் போடப்பட்டிருந்த அறை அது. அதில் மூன்று பையன்கள் காலையிலிருந்து காமிக்ஸ் படிக்க அப்போது பத்துப் பைசா. இரும்புக் கை மாயாவி (திரும்பத் திரும்பப் படித்த ஒரு புத்தகம் பற்றிய வார்த்தை) தோற்பதற்காக சூதாடியவன் என்ற புகழ்பெற்ற காமிக்ஸில் அவன் ஒரு பாத்திரமாகிப் போனான்.

காமிக்ஸில் வரும் ஆட்களின் உருவம் மெலிந்து, நீளமும் நிழல்கள் போலவுமிருந்தன. பக்கங்கள் சாணிக்கலரிலும் அதில் வரும் படங்களில் கட்டடங்கள் உயரமாகவும், பெண் கொலை காரிகள் நீண்ட மார்புகளும், வலையணிந்த கால்களும் கொண்டி ருந்தார்கள். படங்கள் ஓடத் தொடங்கின. ஒரு நாளின் பல சம்பவங்கள் இணைந்து உருக்கொண்டன. குழி எலி என்பவன் தெரியாமல் முக்காடு போட்டிருந்தான். அவனுடைய ஆட்கள் மனிதர்களின் தலையைப் பிளந்து உள்ளே இயந்திரங்களைப் பொருத்தினார்கள். பொம்மைக் காரின் உள்பகுதி போல இருந்த இயந்திரம் பொருத்தப்பட்டவர்கள் இயந்திரம் போலவே நடந்தார்கள். எல்லா இடங்களிலும் இயந்திரத் தலை மனிதர்கள் நடமாடினார்கள். இயந்திரத் தலை மனிதர்கள் ரோட்டில் நடமாடிக்கொண்டிருக்கிறார்கள் என்ற விவரம் அவனுக்குத் தெரிய வந்தது. அப்போது அவன் காமிக்ஸின் பாத்திரமாகவும், அதே நேரம் வீட்டில் இருக்கும் ஒரு பள்ளி மாணவனாகவும், இரண்டுமாகவும், இரண்டுமற்றும் இருந்தான். பாத்திரமான அவனைப் பிடித்து அவன் தலையில் இயந்திரத்தினைப் பொருத்திவிடப் பலர் அலைந்துகொண்டே இருந்தார்கள். அவன் அவர்களுக்கு அஞ்சியே ஓடினான். வீட்டின் அறைகளைப் பூட்டிக்கொண்டான். உடன் படிக்கும் ஒரு பெண் எப்படியும் அவனோடு பேச விரும்பி அவன் வீட்டுக்கே வந்தாள். வீட்டில் அவளை அறைக்குக் கூட்டிக்கொண்டுபோய் சுவரில் ஒட்டி யிருந்த இரும்புக் கை மாயாவியைக் காட்டியதும் அவள் தன் ஆடை களைந்து தான் ஆண் என்றும், பெண் உருக் கொள்ள நேர்ந்தது தன் இயந்திரத் தலையினால் என்றும் சொல்லி தன் நிர்வாணம் காட்டிப் போனாள். அந்த நாளில் அவன் இருந்த மனோநிலையைப் பற்றி நகுலன் எனப்படும் தமிழ் இலக்கிய வாதியின் நாவலில் வரும் ஒரு பாத்திரம் மிகத் தெளிவாகச் சொல்லியிருப்பதாக அவன் நண்பன் சொன்னான்.

தன் தலையில் இயந்திரம் பொருத்தப்பட்டு விட்டதாகவே அவன் உணர்ந்துகொண்டான். அந்த காமிக்ஸ் முடியவேயில்லை. அவனைக் காப்பாற்றும் பொருட்டு அவனும் தன் கைகளை வெட்டிக்கொண்டு மின்சாரத்தால் தன் உருவை மறைத்துக் கொள்ள முயன்றான். அதற்கு முன்பு ஸ்கூலில் ஒரு படம் எடுத்துக் கொள்ளச் சொல்லி மாணவர்களுக்கு சர்க்குலர் வந்தது. படம் எடுக்கப்போகும் நாள் ஞாயிறு. பள்ளியின் மைதானத்தில், விளையாட்டுப் பொருள்கள் அற்ற வெறும் மைதானத்தில் கேலரியின் மறைவில் அவன் எல்லோருடனும் புகைப்படம் எடுத்துக்கொண்டான். அந்தப் புகைப்படத்தில் அவன் காலரை உயரே தூக்கி விட்டிருந்தான். அது முகத்தை மறைத்திருக்கும். அது வந்தபின்பு மாணவர்கள் அவனை உளவாளி என்று சந்தேகம் கொண்டார்கள். அதை மாற்ற வேண்டி தன் வலக்கரத்தைத் துண்டித்துக்கொள்ள விரும்பினாள். அந்த நாள் ஒரு மதியம் யாருமற்ற அறை. கைகளைத் துண்டிக்க எடுத்துக்கொண்ட முயற்சிகள் தோல்வியுற்றன. அவன் முழு வேகத்தில் மின் சாரத்தைத் தொட்டான். தொட்டவுடன் அவன் மறையவில்லை.

அ.தீ.கொ. கழகம் நகரின் ஒவ்வொரு மூலையிலும் அ.தீ.கொ. கழக உளவாளிகளை அனுப்பியது. அவர்கள் ரகசியக் குறிப்பேடுகளோடு நண்பர்களைச் சந்தித்து அவர்களைப் பற்றிய விவரங்களைக் குறிப்புகளாக மாற்றி எழுதி அனுப்பினார்கள். ஒவ்வொரு நகரத்தின் அளவு உள்பட குறிப்பு அனுப்பப்பட்டது. ஒரு நண்பன் என்ற நபரோடு பேசிக்கொண்டிருந்தபோது அவன் கை குறிப்புப் புத்தகத்தில் தானாக இயங்கிக்கொண்டிருந்தது. அந்த அறையில் எரியும் மஞ்சள் விளக்கொளியில் கசியும் கசப்பு நபர்களுக்குள் சென்றது. குமட்டியது. செத்தமீன் வாடை.

நபர் குறிப்புப் பட்டியல் : பெயர் தேவையில்லை. பால். ஆண், பெண், தேவைப்படாத விவரங்கள். அதிகம். ஆக விரும்புவது : இரும்புக்கை : நபருக்குக் கொடுக்கப்பட வேண்டிய சிகிச்சை, கடற்கன்னி சினிமா, தியான தத்துவ தீட்டை.

காமிக்ஸின் பாத்திரமான அவனை மீட்டு அவர்கள் சினிமாவுக்கு அழைத்துப் போனார்கள். அந்தப் படம் ரொம்பவும் பழைய படம். கடற்கன்னிகள் பற்றியது. படத்துக்கு ஒப்படைக்கப் பட்டிருந்தது. படத்துக்குக் கிளம்புவதற்கு முன்பு அவன் அறையில் வெயிலில் நாளெல்லாம் இருக்க வேண்டியிருந்தது. மாலையில் வந்த நண்பன், பொய் ஸ்தனங்களையும் பெண்

ஆடைகளையும் கொண்டுவந்து அவனுக்குப் பொருத்தினான். அவனுடைய மீசை, புருவம் மழிக்கப்பட்டது. மழிக்கப்பட்ட பின்பு பார்த்த முகம் யார் என்றது. அந்த இடங்களில் மை தீட்டப்பட்டது. மிக அழகாக மாற்றப்பட்ட அவன் பெண் உருக் கொண்டான். பதினாறு வயதுப் பெண் அவள். ஸ்தனங்களின் கவர்ச்சி அவனுக்குள்ளும் கிளர்ந்தது. அவன் பின் அவள் என்றாகி, படத்துக்குக் கிளம்பினான். நண்பன் அவள் தோள் மீது கை போட்டுக்கொண்டான். இருவரும் மெதுவாக ரோட்டில் போனார்கள். ரோட்டில் போன அவன் - அவள் மீது பலரின் பார்வை பதிந்துபோனது. பஸ்ஸின் கூட்டத்தில் மையல் கொண்ட ஆணின் மோகித்த கண்கள் அவள் மேல் விழுந்தபோது அவன், அவள் என்ற நிலையை அறுத்து எறிந்து நின்றான்.

பெண்கள் சீட்டில் பயணம் செய்தான். பெண்கள் கவுண்டரில் டிக்கெட் எடுத்தான். தியேட்டரில் நண்பன் படம் நடந்து கொண்டிருக்கும்போதே பெண் உரு இது என மறந்து, பெண் என்ற நினைப்பிலே அவசரமாகக் காதல் கடிதம் எழுதி அவனிடம் தந்து பொய் ஸ்தனங்களைத் தடவி மகிழ்ந்தான். படம் மீன் கன்னி பற்றியது? மீன் கன்னிக்குத் தலை மட்டுமே இருந்தது. பெண் தலை கொண்ட மீன் அதை மோகித்த ஒருவனைக் கீழ் உலகுக்குக் கூட்டிப்போனது. அப்பா மீன், அம்மா மீன், தாத்தா மீன் எல்லாமும் இதைக் காணாது தட்டழிந்தன. அம்மா மீனின் வால் பார்க்கும் எவரையும் சிரிக்க வைத்தது. மீன் கன்னி ஆளைக் கூட்டி வந்து தாத்தா மீனிடம் காட்டியதும் தாத்தா மீன் வந்து நிற்கும் ஆளைப் பார்த்து, அவன் வலது காதைக் கடித்துச் சென்றது. அவன் கத்தவில்லை. வலது காதற்ற ஒருவன் பெரும் ஓவியன் ஆவான் என்றது மீன். மீன் கன்னி அவனோடு தரைக்கு வந்தாள். தரைக்கு வந்ததும் அவள் பெண் ஆனாள். அந்தப் பெண்ணுடன் அவன் கலவி கொண்டு மீன் குழந்தைகளைப் பெற்றான். தரையில் மீன் வளர்ந்தது. பாதிப் படம் மேல் பார்க்க முடியாமல் போய் அவன் திரையை நோக்கி ஓடினான். தியேட்டர் இருட்டில் யார் மேலேயோ விழுந்தான். நீல நிறக் கலர்கள் தெரிய அழும் குழந்தைச் சப்தம் தரையில் கேட்டது. அ.தீ.கொ. கழகப் படம் முடிவடையாது தியேட்டரில் நாள் எல்லாம் ஓடுகிறது. பார்ப்பவர்கள் நிறைகிறார்கள்.

அறைக்கு வந்த பின்னும் அவன் பெண் உரு அழியாமல் இருந்தது. தன்னை அவன் நினைத்தபடி இருக்க விரும்பினான்.

சிகிச்சைக்காக அவனை ஆட்டோவில் உட்கார வைத்து உடன் சித்தப்பா, அத்தை இருவரும் பிடித்துக்கொண்டார்கள்.

ஆட்டோ ஓடிக்கொண்டிருந்தபோது அவன் மூத்திரம் பெய்யும் ஆண்கள் நிற்கும் சந்தைக் கடந்தான். சுவர் அரிந்த இடம் அது. வளைந்து வளைந்து ஆட்டோ போனது. வீடு போன்ற மருத்துவ மனை. அவன் போனபோது எதிரே பச்சை பச்சையாக இலைகள் உதிர்ந்து கிடந்தன. சிவப்புக் கட்டடம். அவனை உட்கார வைத்துவிட்டு உள்ளே போய்ப் பேசிக்கொண்டு வந்தபோது அவன் எழுந்து அறைகளைப் பார்த்து வந்தான். சின்னப் படுக்கை கள், கடல் தெரியும் இடம். அலைகள் வந்து பாறையில் சிதறு கின்றன. பெரிய மணல்வெளி. பந்து விளையாடும் பையன்கள். ‘சிற்றப்பா போகும்போது அவனிடம் அறை பிடித்திருக்கிறதா எனக் கேட்டார். அவன் ஜன்னல் வழியாகப் பையன்கள் பந்து விளையாடுவதைப் பார்த்ததாகச் சொன்னான். சிற்றப்பா சிரித்துக்கொண்டு எல்லாமே Illusion என்றார். டாக்டர் வந்து பின்னர் பார்த்துப் போனார். அவரும் அறை பிடித்திருக்கிறதா எனக் கேட்டபோது அவன் எல்லாமே இல்யூசன் எனச் சொன்னான். டாக்டர் செல்லமாகக் கன்னத்தில் தட்டி கௌதம புத்தர்தானா நீ என்றார். அப்படிச் சொல்ல அவர் கையில் இருந்த ஆங்கிலப் புத்தகம் காரணமாக இருந்திருக்க வேண்டும் எனப் பின்னாளில் அவனாக யோசித்துக் குறித்துக்கொண்டான்.

அந்த நாள்களில் டாக்டர் இரண்டு புத்தகங்களை விடாமல் படித்து வந்தார். ‘புத்தனை ரோட்டில் சந்தித்தால் கொன்றுவிடு’ என்ற அமெரிக்க நாவல். இன்னொன்று ஹெமிங்வே என்ற அமெரிக்க இலக்கியவாதியின் வாழ்க்கை வரலாறு. டாக்டர் பல நேரம் அறையில் வந்து அவனோடு காமிக்ஸ் பற்றிப் பேசினார். அவர் தன்னைப் பிரபல உளவாளி என்று சொல்லிக்கொண்டார். மாலையில் நிறையப் பையன்கள் விளையாட வருகிறார்கள். மணல்வெளி எங்கும் பையன்கள். பந்து உருண்டு உருண்டு உருண்டு கடல் வரை போகிறது. கால்கள் கடலில் நடக்கின்றன. கையில் பெரிய க்ளோவ்ஸ் அணிந்தவன் தள்ளி நிற்கிறான். டாக்டர் கேட்பதற்காக அவன் சிறு காமிக்ஸ் எழுதத் தொடங் கினான். அதற்கான பேப்பரும், வாட்டர் கலர்களும் கொண்டு வந்து அவர் கொடுத்தார். அந்தப் பேப்பரில் அவன் எழுதத் தொடங்கிய காமிக்ஸில் அவன் அறியாமலே அவன் அ.தீ.கொ. கழக உறுப்பினர் ஆகிப்போனான். கௌதம புத்தர் கூட வந்தார்

அதில். அவரை வீட்டில் அடைத்தே வைத்திருந்தார்கள். நிர்வாண மாக அவர் உட்கார்ந்து இருந்தார். அவரை மீட்பதே காமிக்ஸின் கதை.

டாக்டர் அவன் கேட்காமலேயே ஹெமிங்வேயைப் பற்றிச் சொன்னார். ஹெமிங்வே உடம்பு முழுவதும் மீன் செதில்கள் தோன்றிவிட்டதாக நினைத்துக்கொண்டிருந்தான். எழுத்தாளன் என அவன் நினைத்த போர்க்கால நிருபர் தலை உடைய தன்னைச் சுட்டுக் கொன்ற விவரங்கள் அவனுக்குத் தெரிய வந்தபோது அவன் ஆஸ்பத்திரியில் இருந்தான்.

இரண்டு மாதத்துக்குள் மூன்று தடவை அவன் தலை மொட்டை அடிக்கப்பட்டது. அவன் அவனாகப் பொருள்களுக்கு வேறு பெயர் கொடுத்தான். கௌதம புத்தர் என்ற பெயர் அவனுக்குப் பிடிக்கவில்லை. அவன் மொட்டை அடிக்கப்பட வேண்டிய காலையில் ஆஸ்பத்திரியின் பின்புறக் கிணற்றடிக்குப் போய் உட்கார வைத்து மொட்டை அடிப்பார்கள். தலைமயிர் கீழே, மடியில் விழும். மொட்டைத் தலையோடு திரும்பி வரும்போது அவனைப் பார்க்கும் எல்லோரும் ‘சாமி, சாமி’ என்பார்கள். பல மாதங்கள் அந்த ஆஸ்பத்திரியிலே இருந்தான். இரவில் கடற்கரையில் எழும் சத்தம் விநோதமாக இருந்தது. அவன் மெழுகுவர்த்தி மட்டும் எரிந்த அறையில் உட்கார்ந்து நிழல் பார்த்துப் பழகிப் போனான். மெழுகின் மஞ்சள் நீலம் அவன் அறையில் நிரம்பியது. பின் அவன் வீடு திரும்பியபோது முடிக்கப்படாத காமிக்ஸை வீட்டுக்கு எடுத்து வந்தான்.

மிக ஒல்லியாகவும் தலைமயிர் அற்றும் இருந்த அவன் இருபது வயது அடைந்தான் எனப் பலரும் பேசிக்கொண்டார்கள். அவன் அறையில் நண்பர்கள் இல்லாத காலத்திலும் நண்பர்கள் இருப்ப தாகவே அவன் நினைத்துக்கொண்டு பேசினான். ஹெமிங்வே பற்றி எழுதியவன் பாப்பா என்ற ஞாபகம் வந்தபோதெல்லாம் சிரிப்பு வந்தது. பாப்பா, பாப்பா, பச்சைப் பாப்பா ஹெமிங்வே. சிகரெட் பிடிக்கும் ஹெமிங்வேயின் படத்தினைத் திருடி வந்து அறையில் ஒட்டிக்கொண்டான். அறையில் அவன் சிகரெட் பிடித்தான். சிகரெட் காம்புகள் தரையில் முளைத்தன. சிகரெட் களாக முளைத்த தரையில் காலை எழுந்ததும் சிகரெட் பறித்துப் புகைத்தான். பாப்பா ஹெமிங்... பாப்பா ஹெ... சிகரெட்.

அ.தீ.கொ. கழகம் அழிக்க முடியாமல் வளர்ந்து வருகிறது. அதில் உறுப்பினர்கள் சேர்ந்து தங்களை உளவாளிகள் எனப்

பதிவு செய்துகொண்டார்கள். உளவாளிகள் மிக அழகாக உடை அணிந்தார்கள். காமிக்ஸின் வீரர் ரிப் கெர்பி, தன் குதிரையைத் தொலைத்துவிட்டார். மார்டின் என்ற புது ஹீரோ சர்க்கஸில் கோமாளியாகப் பணியாற்றினார். வலது கை வெட்டப்படாத அவன் உளவாளி இல்லை. மாயாவி இல்லை. பிளேக் 14 என்ற ரகசியக் கிருமி அடங்கிய புட்டி களவாடப்பட்டுவிட்டது. புட்டியை நீரில் கலந்துவிட்டால் நாடெங்கும் பிளேக் வந்து விடும். மரங்கள் அழிகின்றன. பிளேக் 44 பார்முலா அ.தீ.கொ. கழகம் கையில். மாயாவியின் கை மறைந்துபோனது. அஸ்வான் நதிக்கரையில் தங்க விரல் கிடைக்கிறது. உளவாளிகள் சக உளவாளிகள் எனப் பெருகினார்கள். டவுன் பஸ்ஸில் ஆட்கள் கண்காணிக்கப்பட்டார்கள். பொய் ஸ்தனம் கொண்ட ஆண்-பெண்-பெண். மாய காம உறுப்புகளை மாட்டிக்கொண்டு உரசாதீர்கள் எனப் பயந்த குரல் கேட்கிறது. 'மீசைக்காரா, மீசைக் காரா' மீசை எங்கே? மீசை ஆணியில் தொங்குகிறது. எடுத்துக்கோ. பிள்ளைகள் கடற்கரை மணலில் கூச்சலிடுகின்றன.

கடற்கரையில் விளையாடும் ஜோ எனும் பையன் ''பிளாப்'' எனும் பேய் பற்றிய சித்திரக் கதையைக் கொண்டு வந்து அவனோடு சிநேகம் கொண்டான். பிளாப் எனும் கதையின் பிரதிகள் மஞ்சள் படர்ந்திருந்தன. அலுவலகம் போன்ற அறை ஆஸ்பிட்டலின் முன் இருந்தது. அங்கிருந்த பெண் ஒருத்தி இரவில் அந்தக் கதையைத் திருடிப் போய் தன் பெயர் எழுதிக் கொண்டாள். அவளோடு ஜோ போர் விளையாட்டு எனும் மணல் விளையாட்டு விளையாட விரும்பிக் கடிதம் கொடுத்தான். தன்னை விடச் சிறியவனிடம் விளையாடும் இரவில் அவள் அரவமற்றுப்போன கடலில் குளித்து வந்தாள் என ஜோ தினமும் கூறினான். அது எவராலும் நம்பப்பட முடியாததாக இருந்தது. பழைய காமிக்ஸின் அழிந்த பிரதிகள் பற்றி ஜோவிடம் அவன் பேசிக்கொண்டிருந்தான். ஜோ பழைய புத்தகக் கடைக்காரனைப் பிடித்து உலகின் முதல் காமிக்ஸ் கதையினைக் கண்டு எடுத்து வந்தான். அந்தக் கதை முழுக்க சங்கேதக் குறிப்புகள் அடங்கியதும், கடல் மாலுமி ஒருவரால் எழுதப்பட்டதாகவும் இருந்தது. மாலுமி அதைத் தோல் போன்ற பொருளில் கத்தி வைத்து வரைந்து அதை உருவாக்கியிருந்தான். அந்தக் கதையில் ஒரு கழுதை செத்துக் கிடந்தது நூறு வருடத்துக்கு.

நாள்பட்ட கழுதை அது என்று பலரும் பேசிக்கொண்டார்கள். அதன் வால் அறுபட்டிருந்தது. செத்துக் கிடந்த கழுதையின்

திறந்த மூக்கைச் சிறுவனான அவன் மிக அருகில் உட்கார்ந்து பார்த்து வந்தான். கழுதையின் குறி நீண்டு தரையில் கிடந்தது. பெண்கள் அதை மூர்க்கம் கொண்டு பார்த்துப் போனார்கள். கழுதையின் துர்மரணம் எப்படி சம்பவித்தது எனத் தெரியாத போதும் அதன் வாடை அந்தக் கிராமம் முழுவதும் பரவியது. அவன் லீவுக்குத்தான் அந்தக் கிராமத்துக்கு வந்திருந்தான். முதல் நாள் நீச்சல் பழகும்போது உப்புத் தண்ணீரை வேறு நிறையக் குடித்து மூக்கில் புரையேறி நீலச் சுழல்கள் வருவதைப் பார்த் திருந்தான். கழுதையின் துர்மரணம் நடந்தேறிப் பல வருடம் ஆனது என நினைத்துக்கொண்டான். ஊர் திரும்பும் நாள் அன்றே. செத்த கழுதையின் மயிர் செம்பட்டையாக இருந்தது.

ஜோவை அதன் பின்பு சந்திக்கவேயில்லை. ஜோ அ.தீ.கொ. கழகத்தில் சேர்ந்திருக்க வேண்டும். சக உளவாளி ஜோ ஒரே நாளில் பெரியவனாகி, குழந்தைகள் பெற்று இரவில் வயதாகி விடியும் முன்பு இறந்து கிடந்தான். சாலமன் கிரண்டி என்பவன் திங்கட்கிழமை பிறந்தான். அவனைச் செவ்வாய்க்கிழமை சர்ச்சில் பெயர் வைத்தார்கள். புதன்கிழமை அவன் பெரிய ஆளானான். வியாழன் அன்று அவனுக்குக் கல்யாணம் ஆனது. வெள்ளிக்கிழமை உடல்நலம் கெட்டது. சனிக்கிழமை அவன் இறந்தான். ஞாயிறு அவனைப் புதைத்தார்கள். திங்கள்கிழமை ஜோ பிறந்தான். திங்கட்கிழமை. சாலமன் கிரண்டி வாழ்நாள் மொத்தம் ஏழு நாள்தான் எனத் தெரியாது. தெரிய வந்தால் சாலமன் கிரண்டி என்ன செய்வான்? ''சாலமன் அடுத்த ஞாயிறு அன்று இறந்தே போவோம் என்ற செய்தி தெரியாமல் திங்கட் கிழமையான இன்று பிறந்தான்'' என அவன் கதை புனைவு கொள்ளும்.

அவன் வாழ்நாள் சாலமன் வாழ்நாள் போலப் பல மடங்கு பெருகிப் போய்க் கொண்டேயிருந்தது. பின் சாலமன் என்ன செய்வான் பாவம். புதன்கிழமை அவன் பெரிய ஆளாக மாறினான். வியாழன் கல்யாணம் நடந்தது. எல்லாம் ஒரு நாள் இடைவெளி மட்டும். ஒரு நாள் மட்டும்.

அற்ப உயிர்கள் நிறைய இந்த உலகில் இருக்கின்றன. கழுதைக்கு வயது ஏழரை வருடங்கள் மட்டும்தானாம். என்ன செய்ய முடியும்? அவன் பிறப்பதற்கு முன்பே அவனுடைய அம்மா அவன் அண்ணனைப் பெற்றாள். அவன் பிறந்த கணத்திலேயே இறந்துபோனான். அவனுடைய ஆயுள் மூன்று நிமிஷம் மட்டும்.

அவன் நல்ல நிறமாகவும் நெஞ்சில் சிவப்புப் பழம் போல மச்சம் பதிந்தவனாகவும் பிறந்து இறந்தான். மூன்று நிமிஷ வாழ்வில் அவன் கண் திறக்காது, வாயைப் பிளந்து, வலக்கையை மட்டும் அசைத்தான். பின் இறந்துபோனான். உலகில் கரப்பான் பூச்சிகள் கூட அதிகக் காலம் வசிக்கின்றன. ஒரே கரப்பான் பூச்சியா என்றால் தெரியாது. அதன்பிறகு அவன் பிறந்தான். அவன் பிறந்ததும் எல்லோரும் அவனைப் பார்த்தபடி இருந்தார்கள். அவனுக்கு இப்போது இருபத்தி எட்டு வயதாகிறது. அவன் முகம் அண்ணன் போல இருப்பதாகவே கொண்டார்கள். இறந்த அண்ணனை சிறு வெள்ளைத் துணியில் சுற்றிக் கருவேல மரங்கள் அடர்ந்த வெளியில் புதைந்து வந்தார்கள். அவன் நாள்பட கறுப்பு மண்ணாகியிருப்பான்.

இதனைப் பற்றி அவனுக்குப் பத்து வயதுக்கு மேலாகத்தான் தெரிய வந்தது. அப்போது தாத்தாவோடு கருவேல மரத்தின் ஊடே அலைந்தபோது தாத்தா சொன்னார். தரையில் நிற்க முடியாமல் ஓடினான். ஆள் மீது நடக்க முயல்வதாகக் கனவு கண்டான். தாத்தா அன்றிரவு அவனிடம் சொன்னார். உலகில் உள்ள எல்லா மரங்களும் தரையோடுதான் இணைக்கப்பட்டிருக் கின்றன. எல்லா மரங்களும் ஒரே தரையில் தான் உள்ளது என்று. மரித்தவர்கள் என்ன ஆவார்கள்? ''பிளாப்'' புத்தகத்தை ஜோவிடமிருந்து திருடிப்போன ஆஸ்பத்திரி சிப்பந்திப் பெண் பேய்க் கதைகள் மேல் எதற்காக ஆர்வம் கொண்டு இருக்கிறாள்? எல்லாமும் காமிக்ஸில்தான் வருகின்றன என அவனுக்குத் தோன்றியது. கழுதைகள் மரித்துப்போவதால் மட்டும் உலகில் என்ன வெறுமை வந்துவிடப் போகிறது.

குழந்தைகள் ஆர்ப்பரித்து விளையாடுகிறார்கள். மீசைக்காரா, ஓ மீசைக்காரா உன் வலக்கை எங்கே? மீன் கடித்துப் போய்விட்டது.

ஆரவாரம் கேட்கிறது. வைக்கோல் பொம்மை யாரும் வராத இடத்தில் நின்றுகொண்டு காவல் காக்கிறது. காகங்கள் தரை யிறங்காமல் அலைகின்றன. போதும். போதும். வைக்கோல் பொம்மைகள் அவனுடைய சட்டையை, பேண்டைத்தான் போட்டிருந்தன. அவனைப் போலவே இரண்டு பித்தான் போடாது வயிறு தெரிய, வைக்கோல் பொம்மைகள் காவல் நிற்கின்றன. காற்றில் கருப்பு வாடை அடிக்கிறது. செவ்வாய்க் கிழமை இரவு பன்னிரண்டு மணிக்கு கருப்பசாமி வேட்டைக்கு வரும். வெளியே படுத்துக் கிடந்த அவனுக்கு முழிப்பு தட்டியது.

நாய்கள் கூட்டம் முன்வர கருப்பசாமி தெரு சுற்றுகிறார். அவனுக்கு வியர்த்தது. கருப்பசாமி வரும் முன் கறி வாடை எங்கும் அடிக்கிறது. மறுநாள் காய்ச்சல் வந்து திருநீறு வாங்கிப் போட்டார் தாத்தா.

பிள்ளைகள் கூச்சலிடுகிறார்கள்.

''ஓ மீசைக்காரா, மீசைக்கார வைக்கோல் பொம்மையின் உயிர் எங்கேயிருக்கிறது?''

மீசைக்காரனிடம் பதில் இல்லை. பிள்ளைகள் கத்தி ஓய் கிறார்கள்.

பொம்மைகள் ஒவ்வொன்றாகச் சரிகின்றன. எட்டாவது அபேஜி திருடன் என்ற சித்திரக் கதையில் கூட இப்படித்தான். அ.தீ.கொ. கழகம்தான் பொம்மைகள் திருடுகின்றது.

சில தீக்குச்சிகள் கிடைத்தன. தீப்பெட்டியில் மீதமாயிருந்தவை. அதை எரித்ததும் தலை எரிந்து முண்டம் மிஞ்சியது. தலையற்ற தீக்குச்சிகளுக்கு வாழ்நாள் நிமிடத்துக்குள் போதும்.

வெள்ளைக்காரப் பெண்கள் கடல்நுரை ஆடையணிந்திருந் தார்கள். நாலு ஜடை போட்ட பெண், அவளை விட்டு வெகு தூரம் விலகிச் சென்று மீண்டும் திரும்பிக்கொண்டிருந்தாள். ஆஸ்பத்திரி ஜன்னல் வழியாகத் தெரிகிறது. இந்தக் கட்டடத்தில் பலரும் இருக்கிறார்கள். சூனியக்காரக் கிழவி உள்பட. சிலர் வெளியே போயிருக்கலாம். சிலர் விரட்டப்பட்டிருக்கலாம். மேலும் அவன் அங்கு வந்த பின்பு எந்த மாற்றத்தையும் காணவில்லை.

தினமும் குழந்தைகள் விளையாடுகின்றன. மீ.. மீ... மீசைக்காரன்... மீ... மீ.. தெருவில் நாய்கள் விளையாடுகின்றன.

அ.தீ.கொ. கழக நண்பர்கள் சிரிக்கிறார்கள். சாப்பிடக் கூப்பிடு கிறார்கள். ரிப் கெர்பி தோற்பதற்காக சூதாடுகிறான்.

பயமாயிருக்கிறது. எவருமற்ற இடத்தில் என்ன நடக்கிறது? எல்லாம், எதுவுமில்லை.

ஹெமிங்வே தன்னைச் சுட்டுக்கொண்டபோது கடற்கரையில் பிள்ளைகள் விளையாடிக்கொண்டிருந்தார்கள். மீன் பிடிக்க

கிழவன் போய்க்கொண்டிருந்தான். ஹெமிங்வேக்கு வேறு எதைப் பற்றியும் தெரியாது.

மேலும் அவனுக்கு மற்ற உயிரினங்களை விடவும் அதிக வயது ஆகித்தானிருந்தது.

ஹெமிங்வே வாழ்நாள் பற்றிச் சித்திரக் கதை ஒன்று எழுதவும் திட்டமிட்டிருந்தான். ஆனால் அது ஒருபோதும் சாத்தியமாகவே யில்லை.